# சித்திரப் பாக்கொத்து

(பல்துறைப் பாத்தொகுப்பு)


ஆசிரியர்

**கவிஞர் வி. இக்குவனம்**

சிங்கப்பூர்



வெளியீடு

**''வெண்பா வீடு''**

67, ஹில் கிரெஸ்ட் சாலை

சிங்கப்பூர் - 1128

| | | |
|---|---|---|
| ISBN | : | 98-00.4660-x |
| Author | : | V. IKKUVANAM |
| Publisher | : | V. IKKUVANAM<br>67, Hill Crest Road,<br>Singapore - 1128 |
| Title | : | "CHITHIRAP PAKKOTHU" |
| First Edition | : | JUNE, 1994 |
| Book Size | : | 14 ½ x 21 Cms. |
| Price | : | 25 DOLLARS |


Printer

**INDIRA OFFSET PRINTERS,**

1, Office Venkatachalam Street,

Madras - 600 005.

## ஸ்ரீ முருகன் துணை

ஒற்றை மருப்பனை ஒய்யார வேலனைக்
கற்றைச் சடையனைக் கண்ணனை - கொற்றவையை
நான்முகனைப் பூமகளை நாமகளைக் கோள்களினை
நான்பணிவேன் நாளும் நயந்து.

## காணிக்கை

## என் அன்புப் பெற்றோருக்கு

பஞ்சனைய நெஞ்சத்தால் பண்பாய் எனைப்பயந்த
பஞ்சநதம் பார்வதியாள் பாதத்தே - கொஞ்சுதமிழ்ப்
பாமாலை இன்றிதனைப் பாங்குறவே சேர்த்திட்டேன்
பூமாலை என்றே புரிந்து.

# அன்புக் காணிக்கை

சிங்கப்பூரில் ''தமிழ்க் கவிதை வளர்ச்சி'' என்னும் கட்டுரை ஒன்று நான் எழுத முனைந்தபோது, அதற்கான குறிப்புகள் நூலகத்தில் எடுக்குங்கால், இங்கே 103 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த பெரியார் திரு. சதாசிவப் பண்டிதர் என்னும் மாபெரும் புலவர் எழுதிய சித்திரக் கவிதைகள் என்பது கண்டு வியந்து போற்றி அவர்தம் பாதக் கமலங்களை எனது நெஞ்சுட்கொண்டும், சிங்கப்பூரில் இன்று தமிழ் வளருவதற்கு அடித்தளம் அமைத்துத் தந்துதவிய மாபெரும் தனித்தமிழ்ப் பற்றாளரான உயர்திரு ச.சா.'சின்னப்பனார் என்னும் பெரும்புலவர், 9-10-49இல் ''பெரியார்'' அவர்களின் பிறந்தநாள் நினைவாக எழுதிய ''இரகுபந்தன''ச் செய்யுளும், நான் இந்தச் சித்திரக் கவிதைகள் எழுதுவதற்கான துண்டுவிசையாக அமைந்தவை என்பதைப் பணிவன்போடு குறிப்பிட்டு, எனது இந்தச் சித்திரக் கவிதைகள் இந்த இரண்டு பெரியார்களின் நினைவாஞ்சலியாக, அன்புக் காணிக்கையாக அமைகின்றன என்பதையும் குறிக்கிறேன்.

''வாழ்க தமிழ்''

**வி. இக்குவனம்**

**சிங்கப்பூர்**



## கவிஞர் இக்குவனம்



சீர்மிகு சிங்கப்பூரின் சிறப்புமிகு கவிஞர்களில் குறிப்பிடத் தக்கவர் கவிஞர் இக்குவனம். படிப்போரின் நெஞ்சில் பதியும் சுவைமிகு மரபு வழிக் கவிதைகளால் புகழ் பெற்றுள்ள கவிஞர், சித்திரக் கவிதைகளை எழுதுவதில் வல்லவர். கவிஞர், ஆங்கிலம், சமஸ்கிருதம், மலாய், தெலுங்கு போன்ற பிற மொழிகளும் அறிந்தவர். இவரின் கவிதைக் கனிகள், கவிதைக் கதம்பம், ராஜீவ் இரங்கல் அந்தாதி, சித்திரக் கவிதைகள், இன்பநலக்காடு 275, பாற்கடலோன் பள்ளி போன்ற நூல்கள் மிகவும் புகழ் பெற்றவை. வெண்பாப் புலி எனப் புகழப்படுபவர்.

'சிங்கப்பூர் தமிழ் முரசு', 'தமிழ் மலர்' ஆகிய ஏடுகளின் முன்னாள் ஆசிரியரான கவிஞர், மலேசியா பல்கலைக்கழகத் தமிழ் நூலகப் பிரிவின் பொறுப்பாளராகவும் சிறப்பாகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். தேனென நெஞ்சில் இனிக்கும் தீந்தமிழ்க் கவிதைகளை நித்தம் நெய்து தமிழ் அன்னையின் திருவடிகளில் காணிக்கையாக்கிவரும் கவிஞர் தமிழகத்தின் முகவை மாவட்ட பட்டமங்கலத்தில் விஸ்வநாதன் - பார்வதி தம்பதிகளுக்கு 18.10.1923-ல் பிறந்தவர். பல துறையினராலும் போற்றப்படும் பண்புச் செல்வர் கவிஞர் இக்குவனம் ஒரு பைந்தமிழ்த் தேனி.

சித்திரப்பாக்கொத்து

# முன்னுரை

கடல் தாண்டி வாழும் ஒரு புதிய கம்பன்! சிங்கபுரம் சென்று அமர்ந்துவிட்ட மற்றொரு எட்டயபுரம்! தமிழேந்தி வெண்பா தரும் தற்காலப் புகழேந்தி! உப்புக்கடலுக்கு அப்பால் ஒரு தமிழ் அமுதக்கடல்.

சிந்தித்துப் பார்க்கிறேன்; சிங்கப்பூர் உயர் மாளிகையினும் மிக்குயர்ந்த ஒரு மனமாளிகை!

குமரித் தாய்போல் தவம் புரியும் ஒரு தமிழ்க் கரும்பு! இமயம்போல் புலமைக் கம்பீரம்! கங்கை எனப் பொங்கிவரும் கவிதைவேகம்! ஸ்ரீ ரங்கநாதக் கடவுளை, காவேரி என இருகரம் வாரித்து அணைத்துத் தழுவி வலம் வரும் பக்தித் தமிழ்! பொருணை நதிக்கு நடுவில் நிறையப் பாறைகள் உண்டு அதையெல்லாம் சுற்றிச்சுற்றி வந்து குளிப்பாட்டி துள்ளிப் பாய்ந்தோடி வரும் தாமிரவருணித்தமிழ்! பொதிகை மலையின் தென்றல் எனும் செல்வத் தமிழ்நடை!

இன்றில்லையே ரசிகமணி டி. கே. சி. என ஏங்க வைக்கும் இலக்கிய அழகு!

எல்லாவற்றிற்கும் மேலாக, தாம் படைக்கும் இலக்கியம் போலவே தமக்குள் ஓர் பரந்த மனத்தைப் படைத்துக் கொண்ட சிறந்த பிரம்மன்!

இத்தனைக்கும் மொத்தமாக ஒரு மானுடப் பெயர் இருக்க வேண்டுமே; அவரே நான் போற்றும் மாக்கவிஞர் இக்குவனம்! 'பைந்தமிழ் நாட்டின்' பட்டமங்கலத்தில் உதித்த 'பாட்டு மங்கலம்'! பெரும் புலவர் மட்டுமல்ல; மாமனிதர்.

தமிழ் நல்லுலகில், கணிப்பொறி என கவிதைகளைப் பொழிவோரும் உண்டு; ஆனால் அவர் அப்படியல்ல; வேகத்தில் மட்டும் கணிப்பொறியை மிஞ்சுவாரே தவிர, அன்பால், பாசத்தில் ஓர் அற்புதம்! 'கம்பன் என்றொரு

மானுடன் வாழ்ந்ததும்' என்றார் பாரதியார்; இன்று அந்த அமரகவி திரும்பி வந்தால், ''இக்குவனம் என்றொரு மானுடன் வாழ்வதும்'' -என்றே போற்றுவார்!

முல்லைப்பூப் போன்ற துல்லியவெள்ளை அரைக் கைச்சட்டை! அதனினும் மெல்லிய உள்ளம்! கந்தன் வண்ணமேனி! ஞானச் சிந்தனை விழிகள்! பந்தபாசமுள்ள பார்வை! வெண்பா அடிகள்போல், அடியெடுத்துவைத்து நடந்துவரும் கணுவில்லாக் கரும்பு!

வயது 71-என்கிறார், எப்படி நம்புவது! நான் சொல்லவா - என் கணக்குப்படி! 71-ல் உள்ள 1-ஐ எடுத்து, இடது பக்கம் போடுக! 17-என்று வரும்! அப்படி ஒரு 'முருக' இளமை!

திருக்குறளின் இருவரிபோல் அமைந்த இனிய தாம்பத்யம் - திருமகள் பேர் கொண்ட இலட்சுமி அம்மை - இக்குவன வள்ளுவருக்கு வாய்த்த இன்னுமொரு வாசுகியார்!

செய்யுளின் சீர்பரப்பும் பதவுரைகள் போலும் பாசப் பரம்பரைகள், பிள்ளைச்செல்வங்கள்! பொழிப்புரைபோலும் பூவேந்தர், பேரரசர் போலும் பேரச் செல்வங்கள்!

காஞ்சி காமாட்சியம்மை, குடியிருக்கும் என் மனதால், இந்தக் காவியக் குடும்பத்தை வாழ்த்துகிறேன்.

பல்லாண்டு வரலாறு கொண்டு பிறக்கும் மானுடம்; தாயின் கருவறையில் பத்து திங்கள் தான் உருவாகும்; இதுபோல், எங்களது இலக்கிய நட்புறவு உதித்தும், பத்தே திங்கள் தானிருக்கும்! எனது 40-ஆண்டு இலக்கிய ஒழுக்க வாழ்வில், கடவுளிடம் ''ஒரு மனிதனை எனக்குக் கொடு'' - என்று தான் கேட்டேன்; ஆனால், அந்தத் தனிப் பெருங் கருணையோ, மனிதனோடு கவிஞனையும் சேர்த்துப் படைத்து, அர்த்தநாரியாக நான் வணங்க வடிவில் காட்டி விட்டது! வாழ்க.

இனி என் கரங்கள் இக்குவனப் புகழை எழுதிக் கொண்டேயிருக்கும்; என் வில்லிசை நாவு, இக்குவனத் தமிழைப் பாடிக் கொண்டேயிருக்கும்! இக்குவனச் சிந்தனைகள்

என் பிள்ளைச் செல்வங்களை, பேணி வளர்த்துக் கொண்டேயிருக்கும்.

வனமல்ல இவர்; ஒரு வானம்!

ஆகா! இங்கே கவிதைக் கதிரைப் பார்க்கிறேன்; திங்களைக் காண்கிறேன்; நட்சத்திர விடிவெள்ளி வெண்பாவைத் தரிசிக்கிறேன்! மனமும், தமிழும் வானம் தழுவிக் கிடக்கக் காண்கிறேன்!

எங்குமே திருமகளுக்கும் கலைமகளுக்கும் போட்டி என்பர்; இவரிடமும் அவர்கள் இருவரும் போட்டி நடத்துகிறார்கள்; எதில்! அவரை மேன்மைப் படுத்துவதில்! 'நான்முந்தி' என்று கலைமகள் வந்து செழித்திருக்க - 'நான்தான் முந்தி' என்று திருமகள் வந்து கொழித்திருக்க... பாட்டினிலும் 'பொருள்' -வளம்! வீட்டினிலும் பொருள் வளம்! இருபொருள் உண்டு பொருளுக்கும்; இவரிடமே அதுபரிபூரணம்!

இனி, இக்குவனக் கவிதையிடம் வருவோம்!

பாடல் எழுத அநேகர் முதலில் எழுதுகோல் தேடுவர் - அடுத்து, காகிதம் தேடுவர் - பிறகு வைத்து எழுதப்பலகை தேடுவர் - அதன் பிறகு தமிழ் தேடுவர் - பிறகு, நல்ல சொல், தேடுவர் - அடுத்து, கருத்து தேடுவர் - பிறகு சற்று இலக்கணமும் தேடுவர் -இது எல்லாம் முடிந்து கவிதைக் குழந்தையை பிரசவிப்பர் -இன்னும் கடைசியில், தன் கவிதையை ரசிக்க ஆள் தேடுவர்!!

ஆனால்? இவர் நிலை இதுவல்ல!

அற்புதமான ஒரு கற்பூரக் கவிஞன்! இவர், நினைத்தால் போதும், பற்றிவிடும் -ஒரு பாட்டு பிறந்து விடும்!

நின்றால் - பாட்டு!<br>
நடந்தால் - கவிதை!<br>
இருக்கையில் - இலக்கியம்!<br>
பேசினால் - பிரபந்தம்!

கலகலச்சிரிப்பில் ஒரு காவடிச்சிந்து சந்தம்! ஆறுமுகனை வணங்கும்போது -இவர் திருவாய் மொழிவதெலாம் திருப்புகழ்ச் சந்தம்!

பாசப் பிணைப்பில் ஒரு 'பந்தம்'

கைகொடுத்தால், கட்டிப்பிடித்தால் வரவேற்றால், வாழ்த்தினால் - அது நம்மைப் பெற்ற தாயின் பிரியமான ஆசி! உண்மையன்புடன் உருகிப்போய் வாழ்த்துவார் - அப்போது அவர் கண்கலங்கும் - பண் கலங்கும் - இம்மண் கலங்கும்! என் மனமே கலங்கும்! ஆகா! அவர் முகத்தில் முருகன் விளங்குவான்!

சிங்கப்பூர் - ஸ்ரீ சிவன் கோயில் குடமுழக்கு விழாவிற்கு முன்பு யாம் வந்திருந்தபோது, எம்மை வாழ்த்தி, பாராட்டி 'குத்து விளக்கு' பந்தம் கவிதை எழுதி கௌரவித்தார். இப்போது, சிவராத்திரி விழா வில்லிசைக்கு வந்திருக்கும்போது 'அன்னபந்தம்' எழுதி ஆசிபுரிந்தார். அவர் வாக்கு, வரகவி பாரதியின் வாக்குஎனப் பலித்துக் கொண்டே வருகிறது; இவரது பந்தக் கவிதைகளின் சக்தியினால்தான், எனது வாழ்க்கையின் அர்த்தமே எனக்குப் புரிகிறது. பந்தக் கவிதைகள், என் வாழ்க்கையை ஒளிமயமாக்கிவிட்டது! என் குடும்பம் -இப்போது 'தீப மங்கள ஜோதி நமோநம' - திருவண்ணாமலையாகத் திகழ்கிறது.

ஆகா, எனக்கு நல்கிய பந்தங்கள் மட்டுமா; எத்தனை எத்தனையோ பந்தங்கள். யார் யார் எல்லாமோ.....! இவரிடம் பெறும்பேறு பெற்றுவருகிறார்கள்! 'பந்தம்' - கவிதை என்னும் மரபே பலருக்குப் புரியாது; புரிந்தாலும் ஒன்றிரண்ரடில்தான் நின்றிருப்பர்! அத்தகைய இன்றைய தமிழ் உலகுக்கு, இந்த நூல் ஒரு 'பந்தக்' கலைக் களஞ்சியம்! பாட்டியலின் பழந்தமிழ் மரபாகிய அந்தப் பட்டியல்:-

குத்துவிளக்குப் பந்தம், மலை பந்தம். திரிசூலபந்தம், லிங்கபந்தம், வேலாயுதபந்தம், மயில்பந்தம், கடகபந்தம், மாணிக்கமாலை, சதுரங்க, மும்மீன், அறுமீன் பந்தம், நான்கார சக்கர பந்தம் - ஆறாரைச் சக்கர பந்தம், உருத்திராக்க கண்டிகா பந்தம், அறுபடை சடாக்கர பந்தம், சங்க, திருக்கை, திருவடி, கமல, அன்னபந்தம் சர்ப்ப பந்தம், சுழிகுளம், கோமுத்திரி, விருச்சிக, கூர்ம, இரத, ஏகநாக, துவிநாக, நெடில் ரெட்டை நாக, சதுரநாக, அட்ட நாக பந்தம், பிந்துமதி -குறள், இருபா, துவிவெண்பா,

திரிவெண்பா -வரிமடக்கு வெண்பா, திரிபங்கி, சிலேடை வெண்பா. . . !

- இத்தனையும் உள்ளடங்க, என்னுரை பொன்னுரை துவங்க, அணிந்துரை, விநாயக வணக்கம், அழகு சௌந்தரியத்துடன், முத்திரைப்பா எனும் சித்திரப்பா தொகுதியோடு, தமிழ்த்தாய் அஞ்சலி, மாதவன் வாழ்த்துமுழங்க. . . !

இந்த ஏடு, நாடுகள் போற்ற பீடுநடை போட்டு வருகிறது. ஆலய நூல் நிலையங்கள் முதல் அனைத்துத் தமிழ்ப் பல்கலை கழகங்கள், பள்ளிக் கூடங்கள், தமிழ் வீடுகள் வரை இந்த நூலிருந்து ஆட்சி புரிய வேண்டும். நாம் இழந்துபோய்விட்ட பழந்தமிழ்ச் செல்வங்களில், இந்தப் பந்தக் கவிதை மரபும் ஒன்றாகி விடாமல், பாதுகாப்பது நம் கடமையாகும்! ஓய்வு நேரங்களின் ஆய்வுப் பொருளாகி விடக்கூடாது, இது! சித்திரமும் முத்தமிழும் கூட்டாட்சி நடத்தும் இந்தப் பாட்டாட்சிக் கலை, தமிழ் மாநாடு அரங்கங்களில் தனித் தகுதி பெற வேண்டும். புதுக்கவிதை படைக்க வென்று ஒரு தனிப் படை தமிழுலகில் இன்று கிளம்பியிருப்பது போல் -மிகப்பழம் தமிழ் மரபாகிய பந்தக் கவிதை படைக்கவும் ஒரு புலவர் அணி திரளலாமே!

தமிழ் உலகமெல்லாம் இக்குவனங்கள் நிரம்பத் தோன்றட்டும்; ஒவ்வொரு தமிழ்த் திருமறை மேடையிலும், ஓர் இக்குவனம் தோன்றி, பந்தக் கவிதை பாடட்டும்!

ஒரே ஓர் இக்குவனம் என்னும் கரும்பினை மொய்க்கும் எறும்பு ரசிகர்களாக நாமிருப்பதைவிட, எல்லோருமே இக்குவனங்களாகுவதே அவர்க்குப் பெருமை தரும்!

திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களை, 'பத்துக் கம்பன்' - என்று பாராட்டுவர் எனில், என் இக்குவனப் புலவனை 'எத்தனை புகழேந்தி' -என்று ஏத்திப் புகழவிருக்கிறீர்கள்!

நிறைவாக ஒரு சொல்! இக்குவனம் அவர்கள் எத்தனையோ பந்தம் எழுதியிருக்கிறார்கள். எதைவிடவும்,

ஒரே ஒரு பந்தம்தான் அவரிடம் மிக மிகச் சிறந்ததென்பேன்; அதற்கு ஈடிணையே கிடையாது! அதுவே அவர்கள் என்னிடமும், என் குடும்பத்தாரிடமும், என் வில்லிசைக் கலையிடமும் வைத்திருக்கும் 'பாச பந்தம்' -'சொந்த பந்தம்' - 'அன்புப் பந்தம்!

நூறாண்டு, நூறாண்டு என் இக்குவனப் புலவர் வாழ்க, இவ்வண்ணமே நூறு நூறு தமிழ் நூல்கள் வழங்குக, எனக்குக் கடவுள் தந்த' நோபில் மனிதனாகிய 'நோபில் பரிசே! இக்குவனப் பெரியோய்! நீ வாழ்க, வாழ்க என வங்கக்கடல் வான்முழங்க, எங்கள் காஞ்சி காமாட்சித் தாயைப் பணிந்து வணங்கி மகிழ்கிறது என் குடும்பம். வணக்கம்.

சென்னை 93 — அன்பன்
23. 3. 94 — **சுப்பு ஆறுமுகம்**



# பொன்னுரை

எழுபது ஆண்டுகள் நிரம்பப் போகின்ற செந்தமிழ்க் கவிஞர் இக்குவனம் - பேருக்கொத்த செங்கருப்புக்கட்டெடன்ன கவிஞரைப் பார்க்கின்ற பேறும், அவரது அரிய கவிதைக் கதம்பக் கொத்தைப் படிக்கின்ற வாய்ப்பும் பெற்றுள்ளேன். சித்திரப்பாக் கொத்து என்கின்ற நூல் அச்சாகி வருகின்ற தருணத்தில் - சிறிதே அதைக் காணுகின்ற வாய்ப்பு எனக்குத் தரப்பட்டது. 'பாயிரம்' - படித்தவர்க்கு, நூல் மேலும் படிப்பவர்க்கு என்ற வழக்குக்கு ஏற்ப - சித்திரப்பாக்கொத்து என்னைத் திகைக்க வைத்தது, மலைக்க வைத்தது, சிந்தையைச் சிலிர்க்க வைத்தது.

'வெண்பாவிற்-புகழேந்தி' என்பதுதான், தமிழ் கூறும் நல்லுலகம் ஒப்பிய ஒன்றாகும். 'நளவெண்பா'வில் லயித்துப் போன எனக்கு, இக்குவனப் புலவரின் வெண்பாத்திறம் என்னை வியக்க வைத்தது. கோவை, உலா, அந்தாதிக்கு ஒட்டக்கூத்தன் எனும் புலவனை - புகழேந்திப் புலவன் தயாரித்த தமிழ்க் கவிஞர்கள்'ல் - குவால வகுப்பினனான ஒரு கவிஞனைக் கொண்டு - தன்மீது புலமைக் காய்ச்சல் கொண்ட ஒட்டக்கூத்தன் செருக்கடக்க -

மோனை முத்தமிழ் மும்மதமும் பொழி

யானை முன்வந்தெதிர்த்தவன் 'யாரடா' - என்றதற்குப் பதிலடியாக

கூனையும் குடமும் குண்டு சட்டியும்

பானையும் செயும் அங்குசப் பையல் நான் - என்று, பாடப் பயிற்றுவித்தவன் - வெண்பாவிற் புகழ் மிக்க புகழேந்திப் புலவன்.

அவனை அடுத்து, இக்குவனப் புலவன் வெண்பாத்திறம்- என்னை ஆட்கொண்டது எனலாம்.

வெண்பாத்திறம் போன்றே - பழம் பெருந் தமிழ்ப்புலவர்க

ரின் கைத்திறத்தால் - படைக்கப்பட்ட ஆசு, மதுரம், வித்தாரம், சித்திரம் என்றவற்றுள் - சித்திரக்கவிதையில் தேர்ந்த புலமையொடு - தேர்க்கவிதை உருவில் புனைந்துள்ளவைதான் - சித்திரப்பாக் கொத்து!

'தோகைமே லுலவும் கந்தன் - சுடர்க்கரத்திருக்கும் வெற்றி
வாகையே சூடும் வேலை - வணங்குவது எமக்கு வேலை!'

என்றும்

'அறிவாகிய கோயிலிலே - அருளாகிய தாய்மடிமேல்
பொறிவேலுடனே வருவாய் - அமரர்
புதுவாழ்வுறவே புவி மீதருள்வாய்!' என்றும் முருகனைப் பாடிய பாரதியின் பா உணர்ந்து, முருகன் - இரத பந்தம் செய்துள்ளார், இக்குவனக் கவிஞர்!

அண்மைக்காலத்தில் - சேதுநாட்டில் - கிழக்கே இராமநாதர், தெற்கே மங்களநாதர், மேற்கே சொக்க நாதர், வடக்கே நாகநாதர் சூழ அமைந்ததில் - வடக்கே உள்ள நயினார் கோயிலில் பிறந்த அக்கால நாடக மேடை நடிகராக விளங்கிய சக்திவேலாச்சாரி அவர்கள் சித்திரக்கவி எழுதியதாகக் கேள்விப் பட்டுள்ளேன்.

ஆனால், இன்று நம் கண்முன்னே, நாம் வாழும் இக்காலத்தே சித்திரக் கவிதை புனைந்துள்ள - இக்குவனப் பெரும்புலவர் தமிழுக்குக் கிடைத்தது, தமிழ் இனத்தின் பேறு எனலாம்!

இக்குவனம் தமிழ்க் காதல் வளர்க! இக்குவனம் புகழ் வாழ்க!

கிராமியக் கவிஞன் — முகவை இராஜமாணிக்கம்
சென்னை-14.



# இவர் புகழ் நிலைத்திருக்கும்!

பார்போற்றும் திருநாடான சிங்கப்பூரின் தமிழ்க் கவிதை இலக்கிய உலகில் தலை நிமிர்ந்து நிற்பவர் கவிதைப் பெரியவர் இக்குவனம். மரபுக்கு மணமூட்டும் மதிப்புமிகு கவிஞரான இவரின் கவிதைப் படைப்புகள் கற்றறிந்த தமிழ் நெஞ்சங்களின் பாராட்டுக்குரியவை.

தேர்ந்த யாப்பிலக்கணம் கற்றறிந்த புலவர்களாலேயே சித்திரக்கவிதை எழுத முடியும். கவிதைக் கலையின் கைதேர்ந்த சிற்பியான கவிஞர் இக்குவனம் வெண்பா எழுதுவதில் தன்னிக ரற்றவர். அதைப்போலவே சித்திரக்கவிதைகள் எழுதுவதில் நாம் வாழும் நூற்றாண்டில் தலையாயவர்.

தமிழின் மீது தீராக் காதல் கொண்ட கவிஞர் இக்குவனம் படைத்துள்ள 'சித்திரப்பாக் கொத்து' அறிஞருலகம் ஆராயத் தக்கது. சித்திரக்கவி எனும் இச்சீர்மிகு கலை அழிந்துவிடுமோ எனும் நிலையில் அந்த அரிய கலையை அழியாமல் காக்கும் பணியில் வெற்றி கண்டுள்ளார் கவிஞர் இக்குவனம். ஆழ்ந்த புலமையும் பொறுமையும் கொண்டிவர் படைத்துள்ள ஒவ் வொரு கவிதையும் நம் ஐம்புலன்களுக்கும் விருந்தாக அமை யும். கவிஞரின் அயராத முயற்சியால், உழைப்பால் வடிக்கப்பட் டுள்ள ஒவ்வொரு படைப்பும் கவிதை எழுதத் துடிக்கும் இளம் ஆர்வலர்களுக்குச் சிறந்த பயிற்சிப் படைப்பாக விளங்குகின் றன. என்றும் இளைஞராகத் திகழும் கவிதைச் சித்தர் இக்குவ னம் படைத்துள்ள இத்தொகுப்பின் சித்தரக் கவிதைகள் அனைத் தும், நாளும் பொழுதும் நாம் படித்து இன்புறத் தக்கவை. நாளைய தமிழ்க் கவிதை இலக்கிய உலகிற்கு அழியாச் செல்வமானவை.

இத்தகு ஒப்பிலாப் பணியில் வெற்றி கண்டுள்ள பெருங்கவி ஞர் இக்குவனம் அவர்கள் தமிழரின் வாழ்த்துகளுக்கும் பாராட்டு களுக்கும் உரியவராவர்! தமிழுள்ளவரை இவர் புகழ் நிலைத்து நிற்கும்.

வெல்க!

'முல்லைச்சரம்'
சென்னை-26.

அன்புடன்
பொன்னடி

# அணிந்துரை

முனைவர் (திருமதி) இலக்குமி மீனாட்சி சுந்தரம்
நன்யாங் தொழில்நுட்பப் பல்கலைக்கழகம்

தேசியகல்விக்கழகம், சிங்கப்பூர்.

தமிழ்க்கவிதை என்னும் பேராலமரத்தைத் தாங்கிநிற்கும் விழுதுகளாகப் பல்வேறு கவிதை வடிவங்களைக் கூறலாம். இவ்வடிவங்களுள் பெரும்பாலானவை மரபு சார்ந்தவை; சிறு பான்மை, மாறிவரும் காலத்திற்கேற்பப் புத்துருப்பெற்றவை. உரைவீச்சு, புதுக்கவிதை ஆகிய புது வடிவங்கள் பெருகிவரும் இன்றையநாளில் தமிழ்க்கவிஞர்கள் மரபுக் கவிதைகளின்பால் மாறாத பற்றுக்கொண்டுள்ளனர். ஆகலின் மரபுக்கவிதைகளின் எண்ணிக்கையும் பெருகியுள்ளது. இந்நிலை தமிழகத்தில் மட்டு மின்றிச் சிங்கப்பூர், மலேசியா ஆகிய நாடுகளிலும் காணப்படுகின் றது. காலத்திற்கேற்ற புதிய சிந்தனைகளையும் மரபுக் கவிதைக ளின் வழியே சமுதாயத்திற்குச் சொல்லமுடியும் என மெய்ப்பித்து வருகின்றனர் கவிஞர்கள். பழமை, புதுமைக்கு வித்திட முடியும் என்பதனை மரபுக்கவிதைகள் உணர்த்துகின்றன.

மரபுக்கவிதை வடிவங்களுள் சித்திரக் கவிதையும் ஒன்று. சொற்களைச் சித்திரங்களுக்குள், யாப்பமைதி பழுதுறா வண் ணம் இட்டுக் கவிஞன் பாடுவது சித்திரக் கவிதையாகும். ஆசுகவி, மதுரகவி, வித்தாரகவி, சித்திரக்கவி என நால்வகைக் கவிகளை இலக்கண நூல்கள் கூறுகின்றன. சித்திரக்கவிதையில் எண் ணற்ற வகைகள் உள்ளன. இருபத்து நான்கு வகைகளுக்கும் மேலாகச் சித்திரக் கவிதைகளை வகைப்படுத்துகின்றது அபிதான சிந்தாமணி. கவிஞர் மனத்தெழுந்த சொற் சித்திரங்களுக்கேற்ப இச்சித்திரக் கவிதையும் பல்வேறு வகையாகக் கிளைக்கும்.

பக்தி இயக்கக் காலம் தமிழிலக்கிய வரலாற்றின் முக்கிய மான காலமாகும். இக்காலத்தில்தான் சித்திரக் கவிதையும் முகிழ்த்தது. 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞான சம்பந் தப் பெருமான்' சித்திரக்கவிதையின் முன்னோடி என்பதில் தவ றில்லை. இவருடைய தேவாரப் பாடல்களில் மாலைமாற்று, திரு வெழுகூற்றிருக்கை போன்ற சித்திரக் கவிதை வடிவங்கள் இடம்

பெற்றுள்ளன. இவர் காலத்துக்கு முன்பு இத்தகு வடிவங்கள் பாடப்பட்டமைக்கான சான்றுகள் கிடைக்கவில்லை. ஆகவே சித் திரக்கவிதையின் முன்னோடியாகத் தமிழாகராம் திருஞானசம் பந்தப் பெருமானைக் கருதுவதில் மாறுபட்ட கருத்துகள் இருக்க முடியாது.

சித்திரக் கவிதைகள் கவிஞனின் பழுத்த யாப்பிலக்கணப் புலமையைப் பறைசாற்ற வல்லன. யாப்பிலக்கணப் புலமை உடையார்க்கே இக்கவிதைகளைப் புரிந்துகொள்ளும் வல்லமை உண்டு. ஆகலின் இவை பண்டிதர்க்கே உரியனவாயிற்று. தமிழ கத்தில் இடைக்காலத்தே செல்வாக்குப் பெற்றிருந்த இச்சித்திரக்க விதை நாளடைவில் செல்வாக்கிழக்கத் தொடங்கிற்று. கவிஞ னின் கற்பனைத் திறனுக்கோ, படிப்போரின் கற்பனை விருந் துக்கோ இக்கவிதைகளில் இடமில்லை. கவிதைக்கு அணியூட்டும் அணிநயங்களையும் சித்திரக்கவிதைகளில் காண்பதரிது. வெறும் சொற்களுக்கே இக்கவிதையில் முக்கியத்துவம் அளிக் கப்படுகிறது. சொற்களைக்கொண்டு கட்டுப்பட்ட வடிவத்திற் குள் யாப்பையும் மீறாது இட்டு நிரப்ப வேண்டிய காரணத்தினால் மற்ற மரபுக்கவிதை வடிவங்களைப் போலச் சித்திரக் கவிதை யால் சிறப்புப்பெற இயலவில்லை. ஆகவே கற்றோர் மத்தியில் இக்கவிதைகளுக்கு மதிப்பில்லை. எனினும் தமிழகத்தில் ஓரிரு சித்திரக் கவிதைத் தொகுப்புகள் வெளிவந்துள்ளதாக அறிகி றோம்.

சதாசிவ பண்டிதர் சித்திரக் கவிதைகளைச் சிங்கப்பூரில் பாடித் தமிழ்க்கவிதை வளரத் தளம் அமைத்துக் கொடுத்தார். அன்னாருக்குப் பிறகு சிங்கப்பூர்க் கவிஞர்களுள் கவிஞர் இக்குவ னம் இச்சித்திரக் கவிதை வடிவங்களில் நாட்டம் காட்டி வருகின் றார்.

கவிஞர் இக்குவனம் வெண்பாப் பாடுவதில் வல்லார். இவரு டைய கவிதைக் கதம்பம், கவிதைத்கனிகள் ஆகிய இரு நூல்கள் பெரும்பாலும் இறைவனையே பாடுபொருளாகக் கொண்டவை. அவ்வண்ணமே சித்திரப்பாத் தொகுப்பு என்னும் இந்நூலும் இறை வனையே பாடுபொருளாகக் கொண்டு பாடப்பட்டதாம். ஓரிரு கவிதைகளில் தமிழையும் பாடியுள்ளார் கவிஞர். இறைப்பற்றும், தமிழ்ப்பற்றும் மிக்க கவிஞரின் கவிதைகளுக்கு இறைவனும், தமிழுமே பாடு பொருளானதில் வியப்பில்லையல்லவா?

நாக பந்தம், கோமூத்திரி, தேர்க்கவிதை (இரத பந்தம்) வேலாயுத பந்தம், விளக்கு பந்தம், உருத்திராக்க கண்டிகா பந் தம், கடக பந்தம், விருச்சிக பந்தம், சக்கர பந்தம், சதுரங்க பந்தம்,

குத்துவிளக்கு பந்தம், அடுக்கு தீப பந்தம், திரிசூல பந்தம், மயில் வாகன பந்தம், சருப்பதோபத்திர பந்தம், சங்கு பந்தம், மகர பந்தம், திருக்கை பந்தம், திருவடிப் பந்தம், மாலைமாற்று ஆகிய பல்வேறு வடிவங்களைப் பாடியுள்ளார். இவை முன்னர்க் கூறியவாறு கவிஞர் இக்குவனத்தின் யாப்பிலக்கணப் புலமையைத் தெள்ளி தின் காட்டுகின்றன. இவை பாடுதற்கரியனவாம்.

தமிழுணர்வு அருகிவரும் சிங்கப்பூரில் சிங்கப்பூர்த் தமிழர்க ளும் தம் கவிதைகளைப் படித்து இன்புற வேண்டும் என்னும் நோக்குடன் சித்திரக் கவிதைகளை எவ்வாறு படிக்க வேண்டும் என்ற விளக்கக் குறிப்புகளை எண்ணிட்டுக் காட்டியுள்ளார். இக் குறிப்புகள் சித்திரக் கவிதைகளைச் சிரமமின்றிப் படிக்க உதவும்.

முழுவதும் சித்திரக்கவிதைகளைக் கொண்டு வெளிவரும் சித்திரப்பாத்தொகுப்பு என்னும் இந்நூலைத் தமிழ்கூறு நல்லுல கம் படித்துப் பயன்பெற வேண்டும். தமிழ்க் கவிதை மரபை வாழவைக்கும் கவிஞரின் பணி என்றென்றும் தொடர்வதாக!

அன்புடன்,
இலக்குமி மீனாட்சிசுந்தரம்,
18.5.93



# "என்னுரை"

தமிழ் எங்கள் தாய் மொழி. எங்கள் தமிழ்மொழி என்னென்றும் வாழியவே; என்றான் பாரதி. இளமையில் இயற்கையாகவே என் உள்ளத்தில் 'தமிழ்' என்னும் இன்ப வீணை ஒலித்தது. இந்த ஒலி நீண்டு நிலைத்திருக்க வேண்டும் என்னும் எனது அச்சமும் தொடர்ந்து வளர்ந்து கொண்டே வந்தது. காரணம் நான் எனது ''அரிச்சுவடியை'த் திண்ணைப் பள்ளியில் தொடங்கிய காலத்தே, தமிழ் கற்க முனைந்த பார்ப்பனர்களை விரல் விட்டு எண்ணி விடலாம். அந்த அளவிற்கு இப்பிரிவினரிடையே 'வடமொழி' ஆதிக்கம் செலுத்தி ஆட்டிப்படைத்தது.

எங்கள் கிராமம் 'பட்டமங்கலம்' என்னும் ஊர். நான் திண்ணைப் பள்ளியில் ''மணலில்'' ''அ, ஆ'' என்று எழுதிய போது பட்டமங்கலம் என்ற பெயருக்கு மாறாக அது வளப்பம் மிகுந்த ''பசுமை மங்கலமாக'' திகழ்ந்தது. அப்போது எனக்கு வயது 7 இருக்கலாம். (அதாவது 1930). எங்கள் ஊர் மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோவிலில், மாலை ''சாயரட்சை'' என்னும் பெயரில் ''மாலை வழிபாடு'' நடைபெற்றதும், சுவாமியின் பிரசாதமாக ''சுண்டல்'' அனைவருக்கும் கொடுப்பார்கள். அந்த நேரத்தில் பக்தி ஈடுபாடு இருந்தாலும், இல்லாவிட்டாலும், ''சுண்டல் ஈடுபாட்டில்'' என் போன்ற சிறார்கள் கட்டாயம் கோவிலுக்குச் செல்வோம்.

இறைவழிபாடு முடியும் முன் ஓதுவார்கள் தேவாரம், திருவாசகம் ஆகியவற்றிலிருந்து சில பாடல்களைக் கைத்தாளத்துடன் இனிமையாகப் பாடுவார்கள். 'சுண்டல்' பெறும் நினைவு உள்ளத்தே அழுந்தி இருந்தாலும் எனக்கு இப்பாடல்களில் என்னையறியாமலேயே ஒரு வகை ஈர்ப்பு உண்டாகி அது படிப்படியாக வளர்ந்து எனக்குத் தமிழ் கற்க வேண்டும் என்ற ஆசைத் தீயை வளர்த்ததின் விளைவே எனது திண்ணைப்பள்ளிச் சேர்கை.

வடமொழிப் பெரும் புலமை பெற்ற எங்கள் பரம்பரையில் எனது தமிழ் கற்கும் ஆசை ஒரு சிறு புயலை ஏற்படுத்தினாலும் இறுதி வெற்றி எனக்கே. அக்காலத் தமிழ் கற்கும் முறைப்படி மண்ணில் எழுதி, பனை யோலை ஏட்டில் 'சட்டம்' 'சரவை' என்னும் வகைகளை எழுதி, ''எண் சுவடி, கீழ் வாய் இலக்கம், மூதுரை, நல்வழி, நன்னெறி'' ஆகியவற்றையும் கற்றேன். ''நிகண்டு'' என்னும் பாடம் மேற்கொள்ளும் போது, அக்கால மரபுப்படி பள்ளி நாடகங்களில் பங்கேற்றுப் பாடி நடித்ததின் விளைவால், இசைப்பள்ளிக்கு அனுப்பப்பட்டேன். 'தமிழ்ப் படிப்பு'' அந்தரத்தில் நின்றது. இசைப் படிப்பின் வாழ்வு 18 மாதங்களே நீடித்தது. பின்னர் மூத்தோர் ஆணைப்படி, ''வடமொழி'' பள்ளி இதுவும் சில மாதங்களே. இவற்றிற் கெல்லாம் காரணம் என்னுள் இழையோடிய ''தமிழ் பக்தி''யே என்றால் இது மிகையல்ல மேன்மையான கலப்பற்ற உண்மை. பின்னர் ஆங்கிலப் பள்ளியில் சேர்ந்து தமிழை முதற்பாடமாக எடுத்து மேல்நிலைத் தேர்வில் தமிழில் சிறப்பாகத் தேர்வு பெற்றேன்.

இந்த நிலையில் எங்கள் ஊர் ஓதுவார் 'சுந்தரம்பிள்ளை'' என்பார் இயற்றிய ''தும்பிக்கை கொண்டோனே தோத்திரம் செய்தேனே'' என்னும் பாடல் வழி ஈர்க்கப்பட்டு முதன்முதலில் கீழ்கண்ட பாடலை நானாக எந்த வித ஆதரவும் இன்றி இயற்றினேன்.

''சுற்றம் எனைவெறுக்க சூழ்கின்ற வல்வினையால்
பெற்றோர் எனைவெறுக்கப் பேயானேன் - பற்றில்லா
வேற்று மொழி விடுத்து வெல்லும் தமிழ் கற்கத்
தேற்றுவாய் ஈசா தெளிந்து.

இதனைக் கண்ட ஓதுவார் என்னை ஊக்கப்படுத்திப் பாடல் இயற்றுவதற் கான இலக்கண வரம்பு முறைகளை அன்போடு கற்பித்தார்.

இவ்வாறு மறைமுகமாக ஊக்குவிப்பைப் பெற்ற நான் காலப்போக் கில் ஓரளவு இலக்கண நூல்களைக் கற்றேன். பின்னர், பல்கலைக் கழகத்தில் நூலகத்தில் தமிழ் பிரிவிற்குப் பொறுப்பேற்று பல நூல்களைப் படித்துத் தொகுக்க வேண்டிய கட்டாய அடிப்படையில் ஓரளவு பாடல்கள் எழுதத் துணிந்தேன். இதுதான் எனது தமிழ் அறிவிற்கான வரலாறு.

இனி எனது இந்தத் துறைக்குப் பெரிதும் ஊக்கமளித்த நல்ல உள்ளங் களை நன்றியோடு நினைக்கிறேன். குறிப்பாக எனக்கு மிகவும் ஆக்க மூட்டியவர் மறைந்த 'இராசாக்கண்ணனார்' அவர்கள் என்பதைக் குறிக்க மகிழ்கிறேன்.

மலேசியப் பல்கலைக் கழகத்தில் நான் பணியாற்றிய போது என் கவிதைகளுக்கு இடம் தந்து வெளியிட்ட ''தமிழ் நேசன், தமிழ் முரசு, தமிழ் மலர், உதயம்' ஆகியவற்றிற்கும் என் நன்றி.

எனது கவிதைகள் நூலாக்கம் பெற வேண்டும் என்பதில் தீவிர ஆர் வம் காட்டி, ஒத்துழைப்புத் தந்த எனது துணைவி, மக்கள், நண்பர்கள் ஆகியோருக்கும் எனது நன்றி என்றும் உண்டு.

இந்த நூலுக்கு அணிந்துரை, ஆசியுரை வழங்கிய அறிஞர் பெரு மக்களுக்கும், சான்றோர்களுக்கும் குறிப்பாக எனது பேரன்பிற்கு என்றும் உரிய கவிஞர் பொன்னடியான் அவர்களுக்கும், இந்நூலில் இடம் பெற் றுள்ள சித்திரங்களை அழகுறத் தீட்டிய ஓவியர் திரு. பிரகாஷ் குமார் அவர்களுக்கும் இந்நூல் உருப்பெற எனக்கு வலக்கரமாக விளங்கிய எனது கெழுதகை நண்பரும் சம்பந்தியுமான திரு. ஏ.பி. ராமன் அவர்களுக்கும் எனது பணிவமைந்த நன்றியை தெரிவித்துக் கொள்வதில் மகிழ்கின்றேன்.

இனி நீங்கள் இந்தப் பாக்களைச் சுவைக்க முயலலாம். இத்தொகுப் பில் உங்களை எந்தப்பா ஈர்க்கின்றதோ அதுவே நான் பெற்ற வெற்றி. எஞ்சியவை எனது முழுமையான தோல்வி என்பதை மனமாற ஒப்புக் கொண்டு விடை பெறுகிறேன்.

வணக்கம்
வி.இக்குவனம்.
18 ஆகஸ்ட் 1993

குத்துவிளக்கு பந்தம்



சேந்தனின் பாதமே
வள்ளியின் கணவா
நத்தமிழ் மதுப்பா
பண்ணெழப் பாடப்
காட்டிடு கருணை
வாழவே நினைக்க
வேரின் பழுத்த
தேக்குறுஞ் சுளைபோல்
கந்தன் கழலிணை

சீர்தரு நிதியே
நனிசிறப் பியல்பும்
மனதினை யாள்க
பாப்புனை கவியே
மலிவொலி சூழ
வரமது கோரி
விழுபலாக் கனியதன்
தீந்தமி ழன்றோ
காப்பது வாமே.

## குத்து விளக்குப் பந்தம்




கி ம க ங் பொ

பி ம 6 ன ம து

ம் ரு வி

க் க ள் கூ ழ

ம று வு மே ணே ண் க

ப் பு வி யி ன்




ஏர்மிகு பொலியவே
சீர்மிகு பெயரிய
ஆர்த்திடு ஆழிசூழ்
வானர் போற்றப்
மேவுறு மக்கள்
மனமது பொங்க
நாதரும் இன்னிசைப்
எழுப்பிடுஞ் சிறப்பில்
வேல்முரு கனருள்

இன்பப் பண்ணை
சிங்கை மாண்பும்
அலையெனப் பெருகிடும்
புவியின் கண்ணே
கூடி விரும்பி
மகிழ்வே சூழ
பயநார் நாதமும்
சிங்கை நாடு
மேவிவா ழியவே

குத்து விளக்குப் பந்தம்




அழகு வேலவன் அம்புயப் பொற்றாள்
விழிகளில் கொள்வான் வினையது போக
செந்தமிழ் பொழிகிற சேமமு மொன்றி
மணக்கும் வரமருள் வல்லநா வுடைய
மாபுகழ் கொண்ட வாமியே மேதகு
நந்தமிழ் நாரணன் மகிழ்ந்துவா ழியவே

## குத்து விளக்குப் பந்தம்




1. கண_ணுளே நின்றொளிர் கருமணி யன்னவே
2. தனியெழில் சிந்தும் தலைவ மாலோன்
3. துணைவித் துவனியே தோதகம் நீக்கும்
4. பண்பில் வளரும் பணிதோய் பக்குவ
5. நாம தெரிவையே நத்து திரை நீ
6. தாமரைத் தெய்வம்நீ தனித்துவந் தருளே

குத்துவிளக்குப் பந்தம்




பெருகவே இன்பம் பிரியவே துன்பம்
வழியது கண்டேன் வாழ்விலே கதுமென
முந்துமோர் சீரிளம் மூவரே வாநீர்
நன்றுநற் குணத்தின் நன்னய மாகிட
நற்சீ ராகவே நன்நாள் பொலிய
வானொலி நாரா யணன்நீ மகிழ்ந்துவா ழியவே

## வள்ளலாரின் குத்து விளக்குப் பந்தம்




1. சூழ்கவே சுற்றம் துணையது போற்றவே
2. வாழியென் றோதும் வாய்மொழி யதுவென
3. ஏந்துசீர் துவள இருவகை நிதியே
4. சத்தியச் சீர்மை தழைத்திடு கீதையாய்
5. வடலூர் வாழும் மேலாம் வளமே
6. வள்ளலார் கீர்த்தி வளர்ந்துவா ழியவே

# வாழ்க பொன்னடி




1. வாழ்கவே பொன்னடி வாணிகச் சூழலும்
2. வாழ்கவே நட்பு வாரியலை போன்றும்
3. அறநெறி திரியாத் தருபா தனிப்பா
4. கடிமலர் மனத்துக் கன்னன் போன்றே
5. ஆசறு பொற்புறு ஆர்வ சீலப்
6. பாவலர் பொன்னடிப் பாத்திறன் வாழ்கவே



1. திருவருள் சூழவே தேறிடும் ஞானம்
2. கருவென வளரிய காதலின் நேயம்
3. களிசேர் தமிழில் கற்றே தேறி
4. வளமை சேரும் வாழ்விலே கூடித்
5. தளர்விலா நனிசீர் தந்ததின் நுட்பமாய்
6. ஆணவத் தூண்களை ஆட்டி வைத்தே
7. ஆக்கமாய்ச் செந்தமி ழாசையு மேவ
8. நல்லபணி யாற்றிடும் வல்லோ னெங்கள்
9. செல்வக் கணபதி சீர்வா ழியவே

'அடுக்கு தீப பந்தம்'




காணும் விளக்குக் கருதுமன நல்விளக்கே
பூணும் தலவிளக்குப் புன்மைதீர் - தோணுமா
தேவின் புதுவிளக்கே தேயாமா தேகவிடு
மாவிளக் கேனமது வான்.

அலங்கார தீப பந்தம்




தென் பொதிகைக் காற்றிது தேன்தேடிப் போகாதோ
பொன் மயில் போலழகுப் பூந்தோட்ட - முன்னதே
எங்கும் நலனே இயைபுறு நாடிங்கே
சிங்கபுரம் கூட்டின் தேன் தேர்வு.

## மயில் வாகனப் பந்தம்

வாழ்கவே எனக்கும் வகைதா காத்திடும்
சேந்தனே வெற்பழி சீலனே வேலா
தனந்தரு தவப்பெரும் மைந்தா கனகனே
செல்வா தினைகவர் கந்தா தேனினும்
இனியவே செய்க தாயனை யன்பே
பணியணி பரசிவ சேயே முருகா
காவா மீட்சி தரவா வேலவா
கார்த்திகா சம்புவே தாணுவே
காணும் காட்சிதா கந்தனே காக்கவா.

மோகமே மாறுமா
வேகமே போகநீ
இந்தா குமரா குகாநீ
கந்தா முருகா நீ கா

மாற்றறியாத் தத்து வாயென்
வேலனே வாகுகா
வா மாறுமாமே




வேதாந்தா
வேலையா
மேலாம்
புகழ் பெருமன்
தாதாந்தா பாரா தும் நாட்கழித்தே - நீதாபப்
போதாந்தா பொன் மயிலோய் நீதாபோ பத்துமலை
வேதாந்தா வந்தருள்கவே

இரத பந்தம்




சீர் சேர்த்தே ஆதரித்துச் சிங்காரத தண்மலர்க்கால்
தார் தந்தேன் மேளங்க தாளமொடு - வார்வரசி
ஓங்கும் புகழ்தந்த வீங்குகா சூழ்சிங்கை
நீங்காத சிங்காரத் தேர்.

இரத பந்தனம்




சீர் சேர்த்தேன் சேயார்த்தே சிங்கையூர் மாரிக்கே
தேர் விடுக்கப் பாடிடுவேன் தேன்தமிழில் - போர்குறித்தே
அன்பினால் காலத்தே ஆதியே பார் வேறன்று
தென்பாலத் தேவியூர் தேர்

இரத பந்தம்




தேடி வருங் காலத்தேர் தேர்வு தரும் செல்வர் தேர்
தேடறுத் தின்புறுத்தும் தென்னகத்தேர் - சேட திக
ஆரணத்து நித்திலமே ஆடகமாம் சீரக
ஏரகத் தின்புறு தேர்

இரத பந்தம்




பாமதுரச் சீர்மையர்வார் பண்பின் நெறியார்வார்
தேமதுரக் கானனத்தின் சேகரத்தில் - தாமமரும்
நேராரும் பாசமுறு நெஞ்சினர் கண்டாராம்
சீரார் முருகனது தேர்.

இரத பந்தம்




வானவாநீ தங்கும் வரமருள்க வாய்ப்புவர
வானமுத லானமெய் வானவாநீ தாரணியில்
தந்திடு பாதமே தாதாகா கந்தனே
வந்தருள்க தாதா நீ வா

இரத பந்தம்



''வாகரனே மான்மகளின் மாண்குகனே மல்கொலிசேர்
சேகரன் நீ சிந்து வளஞ் சீர்குலுங்கும் - பாவமறத்
தந்த வேல் தாயாகி வாநீதூ மாமருந்தே
செந்தூல் வளர் குமர வா''

வள்ளுவர் தேர் இரத வெண்பா




ஈரடியால் ஈர்த்தார்பார் எங்கள் குறளார்
தேரடியைத் தேவனெனும் சீர்சேர்த்தே - நேரடியார்
உள்ளுவதோ பார் வகுத்த ஊராளும் பேராள்க
வள்ளுவர் சேவடி தேர்

பாவேந்தர் ரத வெண்பா




நேசமிகும் தூய்மையர்வார் நெஞ்சில் துணி பார்வார்
பாசப் பரிவினையும் பம்பரித்தே - பூசலிலாத்
தேவேந்தன் சொல்லெதுவும் தேனுறுந் தீம்பாவேம்
பாவேந்து தேரினைப் பார்.

கண் திறந்து காத்திடவே கண்ணெந்தன் கண்கண்ட
விண்ணமுதின் நற்பயனால் வேண்டியதில் - பண்ணெனவே
சந்தமிகு சொல்லமைய சந்தமிக்கும் பந்தமெலாம்
கந்தன் அருளையே கண்டு



சொல்மதியாக் கண்டவன் தூய்தமிழர் தூய்மல்க
நல்லருளைத் தந்தருளும், நாயகர்தம் - நல்லடியே
நன்றுதொழ வென்றிதரு நன்றுதொடா நல்வினைகள்
தொன்றுதொடு பாடல் தொடு



நல்லழகு சௌந்தரியின் நற்பதத்தை நற்சொல்லு
வல்லதமிழ் நூல்வடிவின் மாலையிட்டேன் - பல்லாண்டு
வந்திக்க வேண்டியடி வந்திக்கச் செய்யுதவி
நந்தமிழே நீயெனக்கு நல்கு



சித்திரப் பாத்தொகுதி சீர்பொலியச் சீர்பூத்த
அத்திமுகன் மாண்புபதம் அன்பொழுகும் - இத்தமொடு
தத்துவம் சொல்லுமுப தத்துவனின் தண்ணருளால்
இத்திசைச் செய்தேனே இட்டு.



செப்பரிய செந்தமிழின் சித்தமொளிர் சித்துப்பா
இப்புவியில் கந்தையநின் இக்குவனன் - ஒப்பரிய
நித்தியப் பாக்களைய நித்தியன்நான் பாடுகின்றேன்
சித்துநீ காவடிச் செண்டு



வான்மலிந்த மாமுகில்நீ மன்னுயிரின் மன்னன் நீ
தேன்மலிந்த பொன்மலர்நீ தென்னவன் நீ - நான்போற்று
மாதவன்நீ செங்கமல மாதவன்நீர் வந்தருளி
மாதவமே தந்தருள்க வாக்கு.



வேண்டுகிறேன் வேலன்தாள் மெய்யுறநான் மெய்யெண்ணி
மூண்டுவரும் நல்லுள்ளம் முன் நினைவும் - காண்கின்ற
சத்திவடி வேலன்தாள் சத்திவரத் தண்ணருளால்
விந்தகா நீவருதல் வேண்டு.



பாவிளக்கே பண்புதரப் பார்விளக்கே பார்கவின்
மாவிளக்கின் நல்லொளிதன் வாவிளக்கின் - பூவிளக்கே
நித்தியச் சத்தியொளி நித்தியனின் முத்தியொளி
பத்தியொளி பாங்கொளியே பாட்டு.



வேற்றுமைகள கொள்ளாமல் விண்ணவரும் விண்ணுற்றே
சாற்றியதோர் வாழ்விக்கும் சான்றெல்லாம் - போற்றிப்பா
கல்லுருக நெஞ்சகக் கல்லுருகக் காட்டுகின்றார்
மெல்லிசை வில்லிசை வேந்து.



வேல்முருகன் நல்லருளே மேன்மைதரும் மேன்மேல் பா
நால்மறையின் தீர்ப்பாகும் நம்முறையாம் - பால்போலும்
நன்மனமே தருமிப்பா நன்மனத்து நாம்விரும்பும்
மென்மன வில்லிசை வேண்டு



அசகறுத்தி இவ்வுடலை ஆட்டுவிக்கும் ஆட்டச்சி
பிச்சியவன் பிஞ்ஞகனின் பேச்சொலியின் - எச்சமென
எண்ணியதே எண்ணிடுக எண்ணியபின் திண்ணமென்றே
அண்ணலடி காவலென அண்டு.



வேல்முருகன் நல்லருளே வெவ்வகையில் வெல்சொல்லே
மேல்நிலையில் பெற்றடியான் வெற்றியுடன் - சால்புகளே
சொல்லுகிற வெல்லமடி சொல்லுகிறான் நம்தப்பு
மெல்லிசையின் வில்லிசை வேந்து



காண்பரிய பேரொளியாய்க் கண்மணிபோல் கண்கண்ட
மாண்புமிகும் கந்தநீயென் மன்னன் தான் - கேண்மைமிகு
ஆறுதலைத் தெய்வம்நீ ஆறுதலைத் தந்தருளிக்
கூறுபடாக் காட்சியையே காட்டு.



வாழ்வருளும் பேரொளியாய் வந்தருளும் வந்தாடு
தாழ்வழித்த கந்தநீயென் கண்ணெனன்பேன் - சூழ்வகல
ஆறுதலைத் தெய்வம்நீ ஆறுதலைத் தந்திட்டால்
மாறுபடும் எங்களது வாழ்வு



முல்லைச் சரங்கொடுத்த முன்னவனாம் முன்வல்ல
நல்லமனப் பொன்னடியான் நாயகன்தான் - வல்லவனே
வந்திடுக தந்திடடி வந்திடுவோர் நெஞ்சத்தே
முந்திடுநீ முத்தமிழ முத்து



முந்துவினைச் சீர்குலைய முன்னவள்நீ முன்வந்தே
தந்தருள்க நல்லவரம் சந்ததமும் - செந்தமிழே
வாழ்வொளியே நல்லதவ வாழ்வொளியாய் எங்களுமை
மூழ்கிடவே ஆசிதர முந்து.



நித்திலத்தே தோன்றவரு நேர்நிற்கும் நேர்பூத்த
சித்திரத்தே நின்றென்றும் சீர்பொலிவும் - புத்தமுதே
சத்தியனே நானுன்னென் சத்தியத்தின் ஊற்றென்றே
நித்தமும் கொள்வேனே நின்று.



நல்லமனம் நல்லமைதி, நற்குணமும் நற்கல்வி
நல்லறிவும் வல்லதிறம் நற்பண்பும் - நல்லவளே
செந்தமிழே வந்திடுதி செந்தமிழப் பாத்தொடுக்க
நந்தமிழே நீவரம் நல்கு



சிந்திக்கத் தூண்டுவதோ சீர்குமரன் சீர்தந்தே
வந்திக்கப் பந்தம்செய் வாழ்வொளியாய் - சிந்தனையே
செய்யவரு சீர்போலும் செய்யவனே மால்மருகத்
தெய்வம்நீ வாதருக சிந்து.



அன்ன பந்தம்

மங்களமாய் சிங்கபுரி மன்னுபுகழ் மன்பாங்கே
தங்கிடுநல் லன்புருசொல் சந்தலீமேல் - எங்களின்
சிந்துநடை கொஞ்சிவரு சிந்துநயப் பாப்புனைந்தால்
வந்திடுமே நட்பு மலர்



பார்த்திடுக என்னையும் பண்புடன்நீ பண்சேர்வு,
சீர்த்திட்ட நற்கவிபோல் சிந்தையினால் - நேர்நின்றே
வேகமுடன் சொல்லும்வி வேகமுடன் நின்கடைக்கண்
பாகமுறத் தாமுருகா பாட்டு.



அன்ன பந்தம்

வந்தவரை, வாழ்வித்தல் வாழ்தமிழர் வாழ்விந்த
சித்திவரும் நற்செயலாம் முன்னேற்றம் - கந்தனடி
பத்தியொடு பற்றினிய பற்றியொட்டுப் பாப்புனையப்
புத்திநீ வாதருக வந்து



சிந்தையிலே வந்துதவும் சித்திரமாம் சித்தந்த
முந்துமொழித் தென்மொழியில் முத்துப்போல் - சந்தமுறு
பத்திமிகு முத்திவழி பத்திமினிர் பாப்புனைந்தேன்
சித்தனே பாடிடுக சிந்து.



பொன்னகராம் சிங்கையிலே பூமனத்துப் பூமகன்லீ
தன்னடக்க மாண்பும்சேர் சத்தியநேர் - நன்மனமே
பொங்குசுவை தந்திடும் பொங்குசுனை நீர்ப்பெயல்போல்
பொங்குதே லீயெனும் பொற்பு.



## சடாக்கர பந்தனம்

ஆறுபடை வீடுடைய ஆறுமுகா சூரருடல்
கூறுபட வேலெறிந்து குன்றமர்ந்தோய் - ஏறுமயில்
மீதமரும் இன்பமது விண்ணமுது நாதத்தின்
போதமருள் ஞானியென்னும் பூண்.

சடாக்கர பந்தனம்

நேசகர மேவமண மேபகவ மேன்மையென
ஒகமுறு சிங்கைநகர் ஊர்ந்துவரும் - பூசமெனும்
நன்நானில் வேலன்தான் நாதங்கள் நன்கமைய
உன்னித்தல் தூய உணர்வு

சடாக்கர பந்தனம் திருப்பரங் குன்றம்

பாசநர பூவமண பாபநவ பூரணனின
தாசனாய்ச் சேர்ப்பிப்பேன் தண்டங்கள் - நேசமுறு
மேவுபரங் குன்றமாம் வீடொன்றாம் தாவுமயில்
கூவுகுயில் கொண்டிலங்குங் கோ.

சடாக்கர பந்தனம் திருச்சீரலைவாய்

ஈசபர மேவகண நாபசிவ ஏகன்தாள்
நீசமனம் நீங்குதற்கே நேர்நின்றேன் - பாசறையாம்
செந்தூரில் கோலோச்சும் சீரோச்சும் சந்தமுறு
கந்தன் நீ பார்த்தருளிக் கா.

சடாக்கர பந்தனம் திருவாவினன்குடி

நேசநர பூவமண நாபதவ நேர்திகழ
பூசமலர்ப் பூம்பொழில்சூழ் பொன்மலரே - வாசமெனச்
சொல்லும்பா வெள்ளைப்பா சோலையப்பா வெல்லும்பா
நல்லாவி னன்குடிப்பாப் பாடு.

சடாக்கர பந்தனம் திருவேரகம்



பாசதர பாவகுண தீபநவ மேவு புகழ்
ஈசனென்னும் நான் முகனின் ஏற்றமது -மோசமென்றே
எண்ணிச் சிறை சேர்த்தே ஏரகத்தே நண்ணிவரும்
அண்ணலடி தோத்தரித்தே ஆடு.

சடாக்கர பந்தனம் குன்று தோராடல்




நேசசுர மாவகுண நேபமுவ நிர்மலனே
கேசவனின் சோதரிசேய் கீர்த்திமிகு - மாசகற்றும்
குன்றிலுறை வேலன்தாள் கோலத்தாள் சென்னியிலே
நின்றிலங்க நாளெல்லாம் நேர்.

சடாக்கர பந்தனம் பழமுதிர் சோலை

கோசகர மேவருண கூபநவ மேருவென்றே
யோசனையில் போயமர்ந்த பொய்யகற்றும் -வாசமது
சேர்க்கும் பழமுதிர் சோலையினூர் சேர்கின்ற
கார்த்திகேயன காலிணையே காண்

சடாக்கர பந்தனம்

தாச புர மேவகண சாபமிவ மேல் திகழ
ஏசலற்ற ஏற்புணர்வே இன்பமுறப் - பேசுதற்கே
வேலவன்நீ காலமெலாம் வேகமுறும் சீலமுடன்
பாலனெனைப் பண்பொழுகப் பார்

## சடாக்கர பந்தனம்




பாசபுர மேவருண பாபமிவ ரேயருள்க
மாசற்ற வாழ்வியலில் மக்களெல்லாம் - பூசலன்றே
கோலமுற்றே நின்றுயரக் கோனுயர மாலருளும்
சீலமுறப் பொங்கட்டும் சீர்

## நாக பந்தம்




கோனே கோனேவா வானே கோனேகோ
மானே மானேவா வானே வானேமா
தேனே தேவாவா வானே கோனேகோ
மானே தேனே வானேயா வாநீயே

## ஏக நாக பந்தம்




கற்பகத் தந்தியின் கன்றே கலை தருதி
பொற்புறு பற்றன்பின் போற்புறு நற்பவத்தை
வேக மிக மாக தவ மேதைமகன் பூமியனைப்
போக மிகப் பூதயனைப் போற்று.

துவி நாக பந்தனம்



இன்னுமா தாமதமா என்பால் பொருள்தர நன்றென நீதாவா - நலம்
பொன்னும் பொருளுமா புண்ணியங்கள் தந்திடும் மன்னவா மாற்று

துவிநாக பந்தனம்



ஏறு மாமயில் ஊறு வேலவா
மாறு மாலதி மாலை யூர்வல
நீறு நல்கிட நேமம் மாறுமா
மாறு கோருவார்வாதி லாதவா

## அட்ட நாக பந்தம்



தேனே திரு தேடி வரும் பாதா
வானின் பொது நீ வாதிரு முருகா
தேனின் தெளிவே தேடுதே குருவேல்
நாடி வருகதே சின்மயா நவிலே

# சதுரநாக பந்தம்



பாலா பணிமா
மேலா குகாவா
கலாப மயிலோனே
மலாப ரனென்மா தவா

வயிலா மிகுதன
மிகை தரு - வேலா
காவா தனி நிர்

## சர்ப்ப நாக பந்தம்



சீலா பழநிச்
கோலா குகாவா
குலாவ தவநாதா
குலாவு தரல்நீ கொடு

சிவனே குலகுரு
குருகுல - மூலா
வாநீ குணவான்

## சதுர நாக பந்தம்



தண்மன வேலா தவநிலை தாதாவா
விண்கவி கூறுவார் வானவா - வாவியோ
வானலை பாலாநீ வாவா வைநீதா
வானகரு வாமான வா

# சதுரநாக பந்தம்



தாயே தலைவா
சேயே அவாவே
வரமே பவமேதா
வரமே தரல்வா வலு.

தவமே தெரிவறி
தெளிவளி - மாயே
வாவா வடிவேல்

விருச்சிக பந்தம்




எங்கள் மனதேவே கோவே தேனச்
செந்தூர் கங்கையெனும் இன்பக் கடல்

விருச்சிக பந்தம்




எங்கள் குலவேலா பாலா வேலப் புண்ணியனே
சங்கையுறச் சித்தியைநீ தா

## மும்மீன் பந்தனம்

வானுலவு மாசீர் சூழ் வாழ்வாங்கு வாழ்சீல
வாணிதேவி வானவனே வாழியநீ - பாணிநீ
வானதேவா தானவா மாதன மானவனே
வானனே வானதன வா

அறுமீன் பந்தம்



1. மங்கள முருகா மான்மகள் பாகா
2. எங்களின் மாபங் காளனே யுன்தாள்
3. தனியொரு தேவனே தவநனி சீலனே
4. கனியெனு சுவைசேர் காதற் பரிசு
5. குஞ்சரி நாதனே சந்தணத் தேகா
6. தஞ்சமுன் தாளே காவா 'தேவா
7. பஞ்சார் பாதந் தாவா
8. அஞ்ச லித்தே னருமை வேலே

அறுமீன் பந்தனம்



1. குன்றில் நிற்குங் கோமான் பாதம்.
2. நின்றொளிர் செய்யும் நெஞ்சே கொண்டு
3. நிம்மதி சூழும் நிலையும் கொளவே.
4. கம்மியம் பெறவே காலக்கோலம்.
5. கனியச் செய்யக் காதல் பூத்தே.
6. கனிக்காய் வேறு வீடே ஏகித்.
7. தனியே வாழும் யோகி
8. புனிதா வேலவா போற்றி னேனே!

மாலை மாற்று - இலிங்க பந்தனம்




மேலவர் நம்பும்சோதி மிக்குரும் கருணையான
ஆலமங் குண்ட துல்லி ஆம்புகழ்க் காசொலிச்சூழ்
ஆலமர் தேவாவென்றே அணுகிக்கை கூப்பினோமே
சீலமுமோங்கு மெங்கள் சிங்கை வாழ் சொக்கலிங்கம்.




பூரணனே காலமெனும் பூமானே நீயறிக
வீரன் பணியதோ வேந்தணியே - காரியமே
தங்கு பகைதாரா சாய்விலா சிங்கையினைக்
கங்கை யணிந்தோன் நீ கா

**மாலைமாற்று**

வாசிதா நீதாகா வானவா வாசிவா
வாசிவா வானவா காதாநீ தாசிவா

வேலாயுத பந்தம்
(மாலை மாற்று)




நாத போதனே நாடுதே தேடுபாதா பாடுதே
தேடுபாதா பாடுதே தேடுநர னேத போதநா

வேலாயுத பந்தனம்

நாதமோதிய நாவல
வேதநாதமு மானவ
போதனேதவ நாதனே
பாதமேதுணை பல்கவே

திரிசூல பந்தனம்




வென்றேநீ கோரிடுவாய் வேலண்ணி நண்ணாத
நன்றெண்ணி வாராத நாகமே - கன்றென
மன்றின் மலையா மறியாயோ தேனன்றோ
குன்றின்கண் தண்ணிலவே கோ

## மாணிக்க மாலைப் பந்தம்




ஆதி நிதிபதி
மின்னொளி வீசும்
பந்தத் தந்திடும்
முந்திடு முன்பின்
வேல்போல்
பீடுபீடு பீடுபெற்

அணிமணி தன்னின்
மிகமிக மிடுக்குறு
பக்க சுகமிக
எனறே முயல
நில்லென வேண்டி
றுயரே

## மாணிக்க மாலைப் பந்தம்




இன்மொழி கூறும்
மன்பன் என்னவன்
மங்கை யிருவர்
தீர்நேர்
நீடு நீடு நீடு

தகைதரு தவஞ்செயு
இன்ப தபசுப
வரவரு ஏதம்
பார்புகழ் மேவ
நிலைக்கவே

சங்க பந்தனம்



1. நீங்கிடுக துன்பங்கள் நேர்த்தியொலி நின்றுலவ
2. யாங்கணுமே இன்பமதும் ஏதமற ஓங்கிடவே
3. ஆள்பவனே ஆணழகா சீரங்கா வந்திடுக
4. நீள்சங்கம் நின்றொலிக்க நீ

சங்க பந்தனம்

பாவலர்கள் பாடுகின்றார் பாங்காம் வருக்கத்தில்
நாவலனாய் வந்தவனே நற்றவனே - ஆவலுறு
தென்குன்றின் செவ்வேளே தேனான செந்தமிழில்
என் மனத்தே இன்றருள்க பா

உருத்திராக்க கண்டிக பந்தனம்



உருத்திராக்க கண்டிகா பந்தனம்

வானமுதம் செந்திலின்
தேனமுதம் சிந்திடும்
கானமுதம் கந்தனின்
தானமுதம் தந்ததே

உருத்திராக்க கண்டிகா பந்தனம




தேடுவதும் வேலன்தாள்
நாடுவதும் சீலன்தாள்
ஆடுவதும் கோலந்தாள்
சூடுவதும் தும்பையே

## திருக்கைப் பந்தம்



சிந்தையின் மாருதமே தருமா மோக
வான வாக மோது போது
ஓது போதுமா தேடு நாடு
தேமா போல வேகா வேல
குன்றுவாழ் சிவமே வரதரன் நின்பால்
பாக தாக வுறவும் விம்ம
உமதிரு திருவுரு மனம க
தகவு தகவ குகமன மருளே.

''திருவடிப் பந்தம்''



1. திருமலர் நீயே தாநா தந்த
2. கீதந் தவேலா வேதநா தபோதநா
3. பலபல பணியணி யணியே யறுமுகா
4. நீயே வருதி நின்தாள் போற்றியே
5. கோலா நிலைநிலா குலநல குருகுகா
6. குருபரா பராபரா தராதரா கோவே
7. கடம்பா நிலைநிதி தருதல் சொல்க
8. தகவாய் வாநீ தாநீ சீரே
9. சீலா மேலா பால பாத
10. நாத வேளவே தபோத
11. முழுமுதல் தலநல
வானவா காவே

''கவிஞர் பொன்னடியின்
கவிதைக் கரங்களுக்கு
எந்தன் கடக பந்தம்''

தாபாதா நாதாந்தா சந்தமுறும் தேனினிய
தேவேதே வர்பணி சீர்தமிழால் - பாவில் நில்
பாவலனென் பொன்னடியே பண்பார்பா நீதாவா
நாவலனே நாடி நனிது

கடக பந்தம்




மோனமன மானமது மூலமல மேலழிய
வானமுத வள்ளல் வடிவேலன் - தேனமுதப்
பாத மலர்கண்டு பற்றிப் பரிவோடு
நாத மெழுப்பிடுமென் நா

## கடக பந்தம்



மாகனக யோகமென மாணரிய பேறுதரு
வாகனக ஞான மனமருளும் - போகமென்னுங்
குன்றமர்ந்த கோவே குருவுருவே கோலநல
மன்றமர்ந்த வேலா நீ வா

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ச | டா | மு | டி | நா | த | னோ | டா |
| து | ந் | த | வே | ர் | ய | டு | ண் |
| ய | மா | த | வ | தா | ச | னை | வி |
| வி | தூ | ர் | ண | து | ந் | த | ம் |
| மா | ல் | ப | ர | மெ | ன் | ப | த |
| ள் | க | ங் | த | வே | ன் | த | ம |
| த | க | மி | ந் | தி | ர | ம | ன் |
| மெ | ட | சி | வீ | க | மி | மே | ண |

சந்தன மென்மண மேமிக வீசி டமேதக
மிந்திர மன்மதன் வேதங்கள் மால்பரமென்பதம்
தந்துணர் தூவிய மாதவ தாசனை விண்டுயர்வே
தந்து சடாமுடி நாதனோ டாடு சதுரங்கமே

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| சி | ரி | த் | து | நீ | யோ | டி | யா |
| க | க் | ஒ | ட | வே | வ | டு | ட் |
| ஸ் | சா | க | ர | மா | ச | ய | வே |
| யி | சை | ச் | லி | து | க | க் | த |
| சு | வை | சே | ர | லே | லா | கு | மே |
| ச் | கி | ங் | தெ | த | ந் | ர் | சே |
| த | நு | த் | தி | க் | க | து | ச் |
| மே | ச | வி | தே | டை | லு | வே | கை |

சிக்கலி லேந்துகை வேலுடை தேவிச மேதகத்
திக்கதுச் சேர்ந்ததெங் கிச்சுவை சேரலே லாகுமே
தக்கது லிச்சையில் சாகர மாசய வேட்டுவ வேட
ஒக்கசி ரித்துநீ ஓடி யாடு சதுரங்கமே

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| இ | னி | வ | ள் | ளி | யு | ட | னா |
| தே | ந் | ணை | த | ந் | வ | டு | டீ |
| ம | மா | த | வ | மீ | ச | னு | மா |
| க | ங் | து | ள | து | ந் | வ | ம் |
| மே | ல் | ப | ர | மெ | ங் | க | ணு |
| ன் | க் | ங் | ர | சா | ன் | க | ய |
| லா | க | வே | ச | ந் | த | ம | நா |
| மே | சு | வீ | னு | க | ங் | மெ | ண |

இந்தள மென்மண மெங்கனு வீசுமே லாகவே
சந்தம நாயகன் சாரங்கன் மேல்பர மெங்கணும்
வந்துள துங்கம மாதவ மீசனு மாடிடு
வந்தணைந் தேஇனி வள்ளி யுடனா டுசது ரங்கமே

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1 ஆ | 2 டி | 9 வ | 10 ரு | 25 வே | 26 லை | 49 ய | 50 றி |
| 3 டி | 4 ய | 8 ஆ | 11 ள் | 24 ம் | 27 ந | 48 மை | 51 ய |
| 5 வ | 6 ரு | 7 டி | 12 ள | 23 த | 28 ல | 47 ர் | 52 லை |
| 16 ரு | 15 ண | 14 கா | 13 ம் | 22 த் | 29 ன் | 46 நே | 53 வே |
| 17 வே | 18 ல் | 19 நா | 20 டி | 21 நி | 30 பெ | 45 ம் | 54 ரு |
| 36 லை | 35 டி | 34 கூ | 33 க | 32 க் | 31 ரு | 44 கு | 55 வ |
| 37 யி | 38 ல் | 39 ஆ | 40 டி | 41 யீ | 42 ர் | 43 க் | 56 டி |
| 64 றி | 63 ய | 62 லை | 61 வே | 60 ரு | 59 வ | 58 டி | 57 ஆ |

ஆடி யடிவருடி ஆவருள்ளம் காணரு வேல்
நாடி நித்தம் வேலை நலன்பெருக்க - கூடிலையில்
ஆடியீர்க்கும் நேர்மை யறியலை வேருவடி
ஆடிவரு வேலை யறி.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| வீ | று | பெ | று | வே | லை | வி | டு |
| று | பெ | ன் | கு | ட | க் | னா | வி |
| பெ | ம் | மா | தி | ப | கொ | ன் | லை |
| று | ன் | வெ | யே | று | ண் | ம | வே |
| வே | ற் | கை | க் | கூ | டு | ல் | று |
| லை | ற | வீ | க | ர் | ய | கொ | பெ |
| வி | ல் | மா | று | சூ | ர் | க் | று |
| டு | வி | லை | வே | று | பெ | று | வீ |

வீறுபெறு பெம்மான் பெறுகுதியே வென்றுவேற்கைக்
கூறு படவேலைக் கொண்டுயர்க - வீற லைவில்
மாறு சூர்க்கொல் மன்னா விடு விலை வேறுபெறு
வீறு பெறு வேலை விடு




வானவன மானவா தானதன மானவா
கானகன மானவா கோனகான - மோனவா
பாதாநீதா வேதாகா நாதாநீதா நீதாவா
பாதாந்தா தாபாதா தா.

# லீகுவான்யூ

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | மூ₆ | | | |
| | | | த் | | | |
| | | ழ | தோ | த் | | |
| | | மே | ன் | மை | | |
| ம் | னு | யெ | லீ | ன் | லோ | மே |
| தெ | ழி | ல் | கு | ண | வா | ன் |
| ந் | பு | ன் | வா | ன | த | ன் |
| | | பொ | ன் | னி | | |
| | | கி | பூ | னை | | |
| | | ல் | மு | ன் | | |
| | | னி | கி | ங் | | |
| | | க | ழ் | பா | | |
| | | தி | த் | பா₃ | | |
| | ண் | பு | து | ள் | ள | |
| | ப | ர் | வா | ணி | ப | |
| மு | ம் | ப | ழி | யி | லா | ப் |
| ள | வ | து | ய | லி | வ | ன் |
| ம | ல் | க | வே | நா | ட் | டி |

மல்கவே நாட்டின் வலியது வளமும்
பழியிலாப் பணிவார் பண்பே துள்ள
பாத்திகழ் பாங்கினில் முன்னை பூகி
பொன்னார் மேனிவான் பூம்பொழிற் குன்றம்
மேலோன் லீயெனும் மேன்மைத் தோழா
மூத்தோன் லீகுவான்யூ முகிழ்த்துவா ழியவே.

நான்காரைச் சக்கர பந்தம்




தானதா மருளானதா
தானளாவிய வானதா
தானவா வளமானதா
தானமா மனதானதா

நான்காரைச் சக்கர பந்தம்




தேவேவா தேவா திடமருள நேராக
வாவேதா ஆவா வருடலைக்க நாதா வா
வாங்கலைபோ லோயாதே வற்கடத்து வாழ்வகல
மாங்கனி நீயென்முன் வா

## ஆறாரைச் சக்கர பந்தம்

வேலவனே வள்ளிமன மேவிய மிகையன் பேதிரு
மாலவனின் மங்கல மேசூழ் மருகாவா வெனது
சீலமுறு சிந்தையே மேவிய செல்வ விழைவே வா
வாலறிவே வகை மாறா மாசீர் தருசேயே துரையே வா

## கூர்ம பந்தம்



பாட்டின் நலநன் பணிவாகும்
கூட்டில் தருதல் குயிலாகும்
ஏட்டுரு நெறியினில் சொல்சொல்லும்
பாட்டில் வெல்வெல் வெல்தருபா

மலை பந்தனம்




நீ தயை செய் மாதுடன்வா நீலமயில் வேந்தைய
தாயென நீ வாவா தவநிலைதா மாவேதா
வீராவா கைவேலா வேதாந்தா வந்தீரால்
சேராதா கைலை யது.

# சுழிகுளம்




நிதிபதி பார்நீயே
தினகரன் தேவேநீ
பகலுள தேவேதேர்
திரளநீ தாதேன்பா.

சுழி குளம்




மதமிகு வாழ்வாமா
தயை குரு குகனேவா
மிகு நகு வேபுகழ்
குரு குகநீ வாகுவா




மேதை கதை கீதையதை வேதைவதை தாதையிதை
போதை விதை ஓதையறப் போகுவது - காதையா
சீர்மல்கு சிங்கப்பூர் சிங்கார வேலவன்
தார்மல்கத் தந்திடும்பா தை

சருப்பதோ பத்திரம்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| கா | வா | தா | நீ | நீ | தா | வா | கா |
| வா | கா | பூ | தா | தா | பூ | கா | வா |
| தா | பூ | வே | போ | போ | வே | பூ | தா |
| நீ | தா | போ | கா | கா | போ | தா | நீ |
| நீ | தா | போ | கா | கா | போ | தா | நீ |
| தா | பூ | வே | போ | போ | வே | பூ | தா |
| வா | கா | பூ | தா | தா | பூ | கா | வா |
| கா | வா | தா | நீ | நீ | தா | வா | கா |

காவாதா நீந்தா வாகா
வாகாபூ தாதாபூ காவா
தாபூவே போபோவே பூதா
நீதாபோ காகா போதாநீ

## கோமுத்திரி

க ண் ம ணி தே டி ய க ற் ப க மே ப ண் த ரு நா த ப் பூ ங் கு யி லே

வி ண் ம ணி நா டி ய பொ ற் ப க மே க ண் த ரு போ த ப் பூ ங் கு ழ லே

கண்மணி தேடிய கற்பகமே பண்தரு நாதப் பூங்குயிலே!

விண்மணி நாடிய பொற்பகமே கண்தரு போதப் பூங்குழலே!

## கோமுத்திரி




கண்தொடு காதலே கற்பகமே மண்தொடு வாசமே அற்புதமே!
விண்தொடு கூதலே கம்பளமே நண்பொடு நேசமே அன்புறுமே !

## திரிபங்கி

| | | | | |
|---|---|---|---|---|
| வேலைப் | பிடித்த | மிளிர்க்கரத் | தாய்குன்றில் | மேவியவுன் |
| காலைப் | பிடித்துக் | களிக்கின் | றேன்மன்றின் | காவியமே |
| கோலை | முடித்தே | யளிக்கின் | றேன்தென்றல் | பாவியமே |
| மாலை | கொடுத்தே | விளக்கின | றேன்எந்தன் | ஓவியமே |

| | | |
|---|---|---|
| 1. வேலைப் பிடித்த | 2. மிளிர்க்கரத்தா | 3. குன்றில்மேவியவுன் |
| காலைப்பிடித்துக் | களிக்கின்றேன் | மன்றின்காவியமே |
| கோலைமுடித்தே | அளிக்கின்றேன் | தென்றல்பாவியமே |
| மாலைகொடுத்தேன் | விளிக்கின்றேன் | எந்தன் ஓவியமே |

●

## சிலேடை பெண்பா

### ''சந்தனமும் - தாரமும்''

வாச(ம்) இருப்பதினால் வண்ணமுறத் தோன்றுவதால்
நேசமிகக் கொள்ள நெருக்குதலால் - பூசும்
சந்தனமும் தாரமும் தாரணியில் ஒப்புமெனச்
சிந்துதமிழ்ப் பாட்டெழுதிச் செப்பு.

### ''தேனுந் திருமணமும்''

வாட்டம் தவிர்ப்பதினால் மாறா இனிப்புளதால்
தேட்டமுறு மின்பத்தைச் சேர்ப்பதினால் - பாட்டிசைக்கும்
மேனியெழிற் பெண்ணேகேள் மேன்மையுறச் சொல்லிடுவேன்
தேனுந் திருமணமும் நேர்.

### ''வட்டிக்கடையும் - முட்டைப்பூச்சியும்''

தொல்லை கொடுப்பதினால் துக்கம் கெடுப்பதினால்
எல்லையிலா நச்சரிப்பை ஈவதினால் - தொல்லுலகில்
வட்டிக் கடையும் வலுமுட்டைப் பூச்சியும்
திட்டமுற ஒன்றெனநீ தேர்.

### ''முஸ்லீமே இந்து''

பத்திவழி செல்வதினால் பாசமனங் கொள்வதினால்
எத்தினமும் மாமறையை ஏத்துவதால் - பத்தினியே
சீராய்த் தொழுவதினால் தேன்முஸ்லிம் இந்துவும்
ஆராய்ந்தால் ஒன்றென் றறி.

●

''திரிவெண்பா''

வாழுவாய் மன்னவா மங்களமாய் மண்ணகத்தே
தாழுமே தன்வினைகள் சங்கடங்கள் - சூழுவினை
சன்மத்தில் தங்காமல் சந்திப்பாய் சண்முகன்தாள்
வன்மங்கள் மங்கிடவே வந்து

மன்னவா மங்களமாய் மண்ணகத்தே தாழுமே
தன்வினைகள் சங்கடங்கள் சூழுவினை - சன்மத்தில்
தங்காமல் சந்திப்பாய் சண்முகன்தாள் வன்மங்கள்
மங்கிடவே வந்துவாழு வாய்.

மங்களமாய் மண்ணகத்தே தாழுமே தன்வினைகள்
சங்கடங்கள் சூழுவினை சன்மத்தில் - தங்காமல்
சந்திப்பாய் சண்முகன்தாள் வன்மங்கள் மங்கிடவே
வந்துவாழு வாய்மன்ன வா



''வரிமடக்கு வெண்பா''

தாவாநீ மாதாவா வாதாமா நீவாதா
காவாதா மேலாமே தாவாகா - நீவைநீ
தேடுதே மாடாமே மேடாமா தேடுதே
பாடுபாநீ நீபாடு பா.

கானகமா போடாபோ தேடாதே மாகனகா
மானமோ வாடாவா மோனமா - தேனினிதே
நீடுநீ வாழவா வாழவா நீடுநீ
தேடுதே நாதேடு தே

தேடுநா மேலுமே மேலுமே நாடுதே
பாடுபா நேயனே பாடுபா - காடுகா
தேயுமா மோனமா மானமோ மாயுதே
தேயுதே நாதேயு தே.



## இருபா

### கட்டளைக் கலித்துறை

சித்த மிரங்கிச் சிறியேன் பிழைநீக்கிச் சித்திக்கு
வித்தாய்ச் சிவமாகி முத்தாகி வெற்றிதரு வேல்தந்த
பத்திரைப் பாலன்தாள் பற்றியே பாடுநீ பாவொன்று
முத்தியே தந்து முறுவலிப்பான் எங்கள் முருகோனே.

### இதனுள் வெண்பா

சித்த மிரங்கிச் சிறியேன் பிழைநீக்கிச்
சித்திக்கு வித்தாய்ச் சிவமாகி - முத்தாகி
வெற்றிதரு வேல்தந்த பத்திரைப் பாலன்தாள்
பற்றியே பாடுநீ பா.



### துவிவெண்பா

(அ) நாடுவார் சித்தம் நயந்தே சினமகலத்
தேடுவார் நித்தம் தெளிவுபெற - நீடுயர்ந்த
அத்தன் மகனருளுக் கன்றாடம் வந்திப்பார்
சத்தி மகனருமைத் தாள்.

சித்தம் நயந்தே சினமகலத் தேடுவார்
நித்தம் தெளிவுபெற நீடுயர்ந்த - அத்தன்
மகனருளுக் கன்றாடம் வந்திப்பார் சத்தி
மகனருமைத் தாள் நாடு வார்.

(ஆ) கூடுவார் தோன்றுங் குறையகலத் தோத்திரித்துப்
பாடுவார் ஆன்ற பகைவிலக - ஆடுவார்
சான்றோ(ர்) அணிசேர்ந்தே தங்குவார் அன்புறவே
ஆன்றோர் மணியாவா ராம்.

தோன்றுங் குறையகலத் தோத்தரித்துப் பாடுவார்
ஆன்ற பகைவிலக ஆடுவார் - சான்றோ(ர்)
அணிசேர்ந்தே தங்குவார் அன்புடனே ஆன்றோர்
மணியாவார் ஆம்கூடு வார்.



''பிந்துமதி - குறள் வெண்பா''



கண்கொண்டேன் தாள்கண்டேன் கற்கண்டின் நேர்சொல்லும்
மண்கொண்டேன் கந்தன்பேர் வான்.

வான்கண்டேன் வண்ணத்தின் மாற்றில்லாப் பேர்கண்டேன்
தேன்உண்டேன் சிந்தித்தேன் தேர்.

தேர்கண்டேன் சீர்கண்டேன் தெய்வத்தின் நோக்கத்தில்
பேர் கண்டேன் ஊர்கண்டேன் பின்.

வான்கண்டேன் கார்கண்டேன் மக்கள்தம் வாழ்வென்னும்
தேன்கண்டேன் இன்பத்தின் சீர்.

சீர்செயதேன் உள்ளத்தின் தெய்வத்தின் தீங்கில்லாப்
பேர்கொண்டேன் பேச்சின்றிப் பின்.

நெற்றிக்கண் கொண்டென்முன் நீர்நோக்கின் என்வாழ்வும்
புற்றுக்கண் சென்றேங்கும் போய்.

புள்கண்டேன் வேல்கண்டேன் பூங்குன்றம் வாழ்கின்றோன்
உள்கண்டேன் குன்றத்தின் ஊர்.

ஊழ்வென்றேன் என்நெஞ்சின் ஒப்பில்லோன் சீர்கண்டேன்
பாழ்வென்றேன் பாட்டொன்றால் பார்.

பார்வெல்லப் பங்காற்றும் பாட்டொன்றால் பண்சேர்த்துப்
பேர்சொல்வேன் இங்கென்பேன் பின்.

பின்நோக்கிச் செல்கின்றார் பிற்போக்கின் நெஞ்சத்தார்
பன்நோக்கில் சிந்தித்தார் அவர்.

சேர்க்கின்றார் அன்பென்னும் சிந்தைக்குள் செம்மைசேர்
பார்வென்றோர் ஆற்றல்கள் பார்.

### திருப்பரங்குன்றம்

பாசநர பூவமண பாபநவ பூரணனின்
தாசனாய்ச் சேர்ப்பிப்பேன் தண்டங்கள் - நேசமுறு
மேவுபரங் குன்றமாம் வீடொன்றாம் தாவுமயில்
கூவுகுயில் கொண்டிலங்குங் கோ.

### குன்று தோறாடல்

நேசசுர மாவகுண நேபமுவ நிர்மலனே
கேசவனின் சோதரிசேய் கீர்த்திமிகு - மாசகற்றும்
குன்றிலுறை வேலன்தாள் கோலத்தாள் சென்னியிலே
நின்றிலங்க நாளெல்லாம் நேர்.

### திருச்சீரலைவாய்

ஈசபர மேவகண நாபசிவ ஏகன்தாள்
நீசமனம் நீங்குதற்கே நேர்நின்றேன் - பாசறையாம்
செந்தூரில் கோலோச்சும் சீரோச்சும் சந்தமுறு
கந்தன்நீ பார்த்தருளிக் கா.

சடாக்கரப் பந்தனத்தைச் சண்முகனே உந்தன்
கடாட்சத்தால் கண்டுகொண்டேன் கண்ணால் - கெடாதநல்
வாழ்வும் வளமும் வகையுற நீ தந்திடவே
ஆழ்ந்துன்னைச் சேர்ந்தேன் அறிந்து.

கந்தன் அருளாலே கன்னித் தமிழாலே
எந்தன் உளம்நிறைந்த ஏற்றமிகு - முந்திவரும்
பந்தனங்கள் செய்தேன் பணிவன்பின் மிக்குறுநல்
வந்தனங்கள் என்றே மகிழ்ந்து.



## கை கொடுத்த நூல்கள்

1. மாறனலங்காரம்
2. கவிபாடலாம் - கி.வ.ஜ.
3. நளவெண்பா
4. சூடாமணி நிகண்டு - ஆறுமுக நாவலர்
5. கம்பர் தமிழகராதி
6. தமிழ்க் கவிதைகளில் சந்த அமைப்பு - டாக்டர் ஆலந்தூர் மோகனரங்கம்.
7. சித்திரக்கவிகள் - பாம்பன் தண்டபாணி சுவாமிகள்
8. கவிஞராக - அ.கி. பரந்தாமனார்
9. பாரதியார் பாடல்கள்

